Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

Editor: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீராமாநுஜன் 235

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1968 ஜூலை கீலக ஆடி

## சென்னை மாகாணம் கல்விமந்திரி.
## உயர்திரு. நெடுஞ்செழியனவர்களோடு, P. B. A. சம்பாஷணை.




21—6—'68 தேதியன்று மாலை 4-மணி முதல் 5-மணி வரையில் சென்னை-9. கோட்டையாபீஸில் கனம் இப்பெரியாரைச் சந்திக்கவும் பேசவும் வாய்ப்பு ஏற்பட்டது. நேரில் சந்தித்துப் பேசவேணுமென்று நெடுநாளாக இருந்த விருப்பம் எதிர்பாராதபடி இன்று நிறைவேறியது என்று மகிழ்ச்சியுடன் கூறினேன். (மந்திரி.) டில்லி ஸர்க்கார் 16—4—'68ல் தங்களை டில்லிக்கு விஜயம்செய்யுமாறு அழைத்திருந்தார்களே, துணையுடன் Planல் போய்வந்திருக்கலாமே, போகமுடியவில்லையோ? (P. B. A.) 21—2—1964ல் ஏற்பட்ட உடல்நலக்குறைவை-ஹிருதயகோசக்கோளாறைத தெரிவித்து, அன்றுமுதலாகவுள்ள அசக்திமிகுதியைச் சொல்லியாயிற்று. (மந்திரி.) அது முதல் எவ்விதமானபோது போக்கு? (P.B.A.) உடலில் எவ்விதமான வியாதியும் கிடையாது; உபந்யாஸங்களைக் குறைத்துக் கொள்ள நேர்ந்தது. பண்டுபோல நான்கு பாஷைப் பத்திரிகைகளைக் குறையற நடத்திவருகிறேன். எங்கள் தெய்வமான தேவப்பெருமாளுடைய கைங்கரியங்களை இயன்றவளவு நடத்திவருகிறேன், ஆனந்தமயமான வாழ்க்கையைத்தான் எம்பெருமான் அருள்செய்திருக்கிறுர். (மந்திரி) மகிழ்ச்சி, நலமோங்குக என்று சொல்லி டில்லிஸர்க்கார் கட்டளைப்படி மரியாதையை நடத்தி வழிவிட்டார். (*)

(வைகுண்டவாஸி) ஸ்ரீ. உ. வே. மீஞ்சூர் விஞ்சிமூர் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் தேவியார் திருவத்யயன கோஷ்டி.

ஐம்பது வருஷங்களுக்கு முன்னே ஸ்ரீ பெரும்பூதூரில் உபயவேதாந்த ப்ரவர்த்தகராய் வேதாத்யயன நிஷ்ணாதராய் மீஞ்சூர் விஞ்சிமூர் கேசவாசார்ய ஸ்வாமி யென்கிற மஹான் எழுந்தருளியிருந்தார். அவருடைய திருக்குமாரர் கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி யென்பவர் ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையிலேயே ஸாஹித்யசாஸ்த்ராதிகள் வாசித்து வாக்மியாக எழுந்தருளியிருந்தார்.

அவர்க்குத் திருக்குமாரர்கள் மூவர்; முறையே, திருவேங்கடாசாரியர், ரங்காசாரியர், வரதாசாரியர் என்று திருநாமமுடையவர்கள். மூவரும் வைதிக லௌகிகங்களில் தேர்ச்சி பெற்று ப்ரதிஷ்டிதர்களாய் விளங்கி வருகிறார்கள். இவர்களுக்கு, ஸமீபத்தில் (சென்ற வைகாசி மாத முடிவில்) காஞ்சியில் மாத்ரு வியோகம் நேர்ந்து சரம கைங்கர்யம் ப்ராப்தமாயிற்று. மாத்ரு பக்தியின் கனத்தால் திருவத்யயனத்தைச் சிறப்பாக நடத்திவைத்தார்கள். அந்த ஸமய விசேஷத்தின் காட்சிப் படம் இங்கே விளங்குவது. பாகவதோத்தமர்களின் மங்களாசாஸனத்திற்குரியது. இங்கே திகழும் திருக்குமாரர்கள் மூவரும் ஸகுடும்பர்களாய் ஸகலவித ச்ரேயஸ்ஸுக்களுடனும் நீடூழி வாழ்க. ... (*)